என்று சொல்லிப் புறப்பட்டான்; அரசன் அவனுடைய முழுவிலாசத்தையுங் கேட்டுக் கைநோட்டில் பதிந்துகொண்டு அவனை யனுப்பிவிட்டுத் தான் பள்ளியறை புகுந்து பள்ளிகொண்டான். சிப்பாய்கள் அயர்ந்து தூங்கிக்கொண்டேயிருக்கிறார்கள். அப்போது மூன்றுமணி. ஐந்துமணியளவில் விழித்துக் கொண்டவர்கள் சில குறிப்புகளினால் சோரப்ரவேசமானதாக ஊஹித்து அரசனிடம் வந்து வருத்தத்தோடு கூறினார்கள். அரசன் "ப்ரைவேட் ஸெகிரிடெரியிடம் தெரிவித்து கவனிக்கச்சொல்லுங்கள்" என்று உத்தரவிட்டு நித்திரையிலேயேயிருந்தான். ப்ரைவேட்ஸெகிரிடெரி முழுவதும் சோதித்ததில் இரண்டுரத்னங்கள் காணாமலிருப்பதையும் ஒரு ரத்னம் மட்டுமிருப்பதையுங்கண்டு சலேவிதியால் துர்ப்புத்திகொண்டு அந்த ஒருரத்னத்தைத் தான்கவர்ந்து சொக்காயில் ஒளித்திட்டு, அரசனிடம் வந்து 'மஹாப்ரபோ! கைப்பெட்டியிலிருந்த மூன்று ரத்னங்கள்தான் களவுபோயிருக்கிறது; மற்றதொன்றும் போகவில்லை' என்றான். அதுகேட்டஅரசன் 'மூன்றுமா போய் விட்டது? நன்றாகப் பார்த்தாயா?' என்றுவினவ, அதற்கு ப்ரைவேட் ஸெகிரிடெரி, "நன்றாகப்பார்த்தேன். திருடவந்தவன் ஒன்றிரண்டை வைத்துப் போவனா? மூன்றையுந்தான் கொண்டுபோய்விட்டான்" என்றான். உடனே அரசன் அவனை அங்கேயே உட்காரச்சொல்லிவிட்டு, சேவகனை அழைத்து ஸத்யவாதி கள்ளனுடைய விலாஸத்தைக் கூறி உடனே அவனை இங்கு அழைத்துவா என்று சொல்லி யனுப்பினான். சேவகன் உடனே ஓடிச்சென்று உறங்கிக் கொண்டிருந்த அவனையெழுப்பி "மஹாப்ரபு உன்னைக் கையோடு அழைத்துவாச் சொன்னார்" என்று கூற, அது கேட்ட அவன்—நாமுடைய களவும் அரசனுக்குத் தெரிந்து விட்டாப்போலிருக்கிறது; இருக்கட்டும்; நாம் ஸத்யத்தைக் கைவிடக்கூடாது" என்று உறுதிகொண்டு இரவில் திருடிக் கொணர்ந்து உள்ளே வைத்திருந்த ரத்னத்தை யெடுத்து மடியில் வைத்துக்கொண்டு அரசனிடம் சென்று நின்றான். உடனே அரசன் அவனை நோக்கி 'நேற்றிரவு என்ன நடந்தது? உள்ளபடி சொல்லு பார்ப்போம்' என்றான். அவன் ஒன்றையும் ஒளியாமல் உள்ளபடி சொல்லி, "களவு செய்வதற்கு இங்கு வந்தேன்; மூன்று ரத்னங்களிருந்தன; எனக்குத் துணைபுரிந்த ஒரு பக்கிரிக்குப் பாதி பங்கு கொடுக்கவேண்டி யிருந்தபடியால் மூன்றைப் பங்கிடமுடியாதென்று ஒன்றை வைத்திட்டு இரண்டைமட்டும் கவர்ந்து சென்று ஒன்றை அவனுக்குக் கொடுத்து விட்டேன்; ஒன்று இதோ என்னிடமுள்ளது' என்று சொல்லிக்கொண்டே மடியிலிருந்த ரத்னத்தை யெடுத்து அரசனது பாதத்திலே வைத்து "மஹா ப்ரபோ! என்னை மன்னிக்கவேணும், ஒன்றும் செய்யாமல் விட்டுவிடவேணும்" என்று சொல்லிப் பாதங்களில் விழுந்துகிடக்கிறான். அரசன் அவனை அஞ்சேலென்று சொல்லித் தேற்றி நாற்காலியில் உட்காரவைத்துவிட்டு, தன் மடியிலிருந்த ஒரு ரத்னத்தை யெடுத்துக் கீழே வைத்திட்டு மந்திரியை நோக்கி "இரண்டு ரத்னங்கள் இதோ வந்துவிட்டன; மூன்றாவது ரத்னத்திற்கு என்ன சொல்லுகிறாய்?' என்று கேட்க, அப்போதும் அவன் தன் களவை இசைந்துகொள்ளமாட்டாமல் "இந்தக் கள்ளனேதான் அதையும் கவர்ந்தானென்று நான் ஸத்யம்பண்ணுவேன்" என்றான்; உடனே அரசன் சிப்பாயை யழைத்து 'இவனது அரைத்துணியையும் சொக்காயை

யும் அவிழ்க்கச்செய்ய, அவன் ஒளித்துவைத்திருந்த ரத்னம் கீழே விழுந்தது. இனி மேல் கதையை வளர்த்தவேணுமோ? மந்திரிக்குக் கொடிய தண்டனை கிடைத்தது; ஸத்யவாதிக்கு மந்திரி பதவியும் அவனுடைய ஆசாரியர்க்குப் பாதி ராஜ்யமும் கிடைத்தது. ... ... ... ... ... •

ஸத்யவாக்கின் பெருமை கண்டீர்களா ?



# பிங்கள வத்ஸர மங்களமாலிகை 3-ன் தொடர்ச்சி

## முன்னிதழில் தொடங்கின *பூமன்னுமாது பொருந்தியமார்பன்* பாசுரத்தின் விவரணத் தொடர்ச்சி

[11, 12, 13, அடிபணிந்துய்ந்தவன் என்ற சொற்றொடர் முன்னிதழில் விவரிக்கப்பட்டது. இப்போது அந்த மூன்றுசொற்களும் தனித்தனியே விவரிக்கப்படுகின்றன.

**11**. அடி. திவ்யப்ரபந்தங்களில் திருவடியைப்பற்றி ஒரு விசேஷம் கேண்மின். பொய்கையாழ்வார்முதல் திருமங்கையாழ்வாரளவும் ஒவ்வோராழ்வாரும் பிரபந்தம் தொடங்கும்போதோ முடிக்கும்போதோ (இரண்டிடத்திலுமோ) திருவடியைப் பேசுவதை விரதமாகக் கொண்டிருக்கின்றனர். இதை அடைவே விவரிக்கின்றேன். (பொய்கையாழ்வார்) *செய்யசுடராழியானடிக்கே* என்று தொடங்கினர். *ஓரடியும் சாடுதைத்த ஒண்மலர்ச்சேவடியும், ஈரடியுங் காணலாமென்னெஞ்சே! ஓரடியில் தாயவனைக் கேசவனை* என்று திருவடிமயமாகவே பேசித் தலைக்கட்டினர். (பூதத்தாழ்வார்) தம்முடைய திருவந்தாதியைத் தலைக்கட்டும்போது *அறைகழல சேவடியான் செங்கணெடியான்* என்றருளிச் செய்தார். (பேயாழ்வார்) இவர் தொடங்கும்போது *இன்றே கழற்கண்டேன்* என்றருளிச் செய்து, பிரபந்தம் தலைக்கட்டும்போதும் *சக்கரத்தான் தாள்முதலே நங்கட்குச் சார்வு* என்றருளிச் செய்தார். (திருமழிசையாழ்வார்) திருச்சந்த விருத்தம் தலைக்கட்டும்போது *உன்னபாதமென்ன நின்ற ஒண்சுடர்க்கொழுமலர்* என்றருளிச் செய்தார். (நம்மாழ்வார்) திருவிருத்தம் தொடங்கும்போது *அடியேன் செய்யும்

விண்ணப்பமே* என்று சொல்லி உடனே *தொழுநீரிணையடிக்கே அன்பு சூட்டிய* என்றருளிச்செய்தார். திருவிருத்தம் தலைக்கட்டும்போது *அடிச்சண்ணி சூடிய மாறன்* என்றருளிச்செய்தார். அடுத்தபடி திருவாசிரியம் தொடங்கும்போது *மூவுலகளந்த சேவடியோயே* என்றார். பெரியதிருவந்தாதி தலைக்கட்டும்போது *மொய்கழலே ஏத்த முயல்* என்றருளிச் செய்தார். திருவாய்மொழி தொடக்கம் *துயரறு சுடரடி தொழுதெழென் மனனே* என்பது. (குலசேகராழ்வார்) பெருமாள் திருமொழி தொடங்கும்போது *திரைக்கையால் அடிவருடப்பள்ளிகொள்ளும்* என்றருளிச்செய்து, முடிவிலும் *நலந்திகழ் நாரணனடிக்கீழ் நண்ணுவாரே* என்றருளிச்செய்தார். (பெரியாழ்வார்) திருப்பல்லாண்டு தொடக்கம் *உன் சேவடி செவ்வி திருக்காப்பு* பெரியாழ்வார் திருமொழி தலைக்கட்டும்போது *திருப்பொலிந்த சேவடி என் சென்னியின்மேல் பொறித்தாய்* என்றருளிச் செய்தார். (தொண்டரடிப்பொடிகள்) இவருடைய திருநாமமே அடிபட்டுக்கிடக்கிறது. (திருப்பாணாழ்வார்) *திருக்கமலபாதம்வந்து என் கண்ணினுள்ளனவொக்கின்றவே. *திருமங்கையாழ்வார்) இவ்வாழ்வார் வயலாலிமணவாளன் திருவடியில் வாய்வைத்தே பிரபந்தம் தொடங்கினார் என்றுணர்க. சரமப்பிரபந்தம் தலைக்கட்டும்போதும் *நெடியானே அடிநாயேன் நினைந்திட்டேனே* என்றார். (மதுரகவிகள்) ☼முயல்கின்றேன் உன்றன் மொய்கழற்கு அன்பையே☼. (ஆண்டாள்) ☼உன்பொற்றாமரையடியே... கேளாய்☼. திருமொழிமுடிவில் ☼பெருந்தாளுடைய பிரானடிக்கீழ்ப் பிரியாதென்றுமிருப்பாரே☼ (இராமாநுச நூற்றந்தாதி) மாறனடிபணிந்துய்ந்த—☼இராமானுசனடிப் பூமன்னவே*.

நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில் (6-10) ☼உலகமுண்ட பெருவாயா பதிகத்தில் குறிக்கொள்ளத்தக்க விசேஷம் கேண்மின்; அப்பதிகத்தின் பதினொரு பாசுரங்களிலும் திருவடிப்ரயோகம் தவறாமலுள்ளது. 1. உனபாதம் கூடுமாறு. 2. உன்னடி சேர்வண்ணமருளாயே. 3. அண்ணலே! உன்னடி சேர. 4. பூவார் கழல்களருவினையேன். 5. திணரார்சார்ங்கத்துனபாதம். 6. உன்னடிக்களடியேன் மேவுவதே. 7. நொடியார் பொழுது முனபாதங்காண. 8. நோலாதாற்றேனுனபாதங்காண. 9 அந்தோவடியேனுனபாதம். 10. உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே. 11. அடிக்கீழமர்ந்துபுகுந்து. (இங்குமற்றொன்றும் குறிக்கொள்ள வேணும்.) இவ்வுலகமுண்டபதிகத்தில் பாசுரந்தோறும் திருவடிப் பேச்சுவருவது போல, (பாசுரந்தோறும்) அடியேன் என்பதும் வருவதுகாணலாம். நான்காவது பாட்டில் மட்டும் அடியேனுக்குப் பதிலாக 'அருவினையேன்' எனவந்துள்ளது.

**12** பணிந்து. ☼பணிந்துயர்ந்த பௌவப் படுதிரைகள்மோதப் பணிந்த பணமணிகளாலே அணிந்து. அங்கு அனந்தனணைக் கிடக்குமம்மான். அடியேன் மனந்தனணைக் கிடக்கும் வந்து☼. இது மூன்றாந்திருவந்தாதியில் பதினைந்தாம் பாட்டு. கீழ்ப்பதினான்காம் பாட்டில் ''மாற்பால் மனஞ் சுழிப்ப மங்கையர் தோள் கை விட்டு நூற்பால் மனம் வைக்க நொய்விதாம்'' என்றருளிச் செய்த ஆழ்வாரை நோக்கி, சாஸ்த்ரங்களில் மனம் வைத்து அவ்வழியால் தான் எம்பெருமான்படிகளை அறியவேணுமென்றீரே; நீர் அவ்விதமாகத் தான் அறிந்தீரோ?' என்று சிலர்

கேட்க; எம்பெருமானுடைய நிர்ஹேதுகமான விஷயீகாரத்திற்கு இலக்கானவர்கள் சாஸ்த்ரங்களில் சிரமப்படவேணுமோ? அவன் தானே ஒருவரை விஷயீகரிக்கத் திருவுள்ளம்பற்றினால் எல்லை கடந்த அன்புகொண்டு அவன் செய்யும் காரியங்களைத் தடுப்பாருண்டோ?' திருப்பாற்கடலிலே பரமஸுகமாகக் கண் வளர்ந்தருளுமவன் அதனை விட்டிட்டு என்னெஞ்சிலே வந்து கிடக்கிறானே; இது அவனுடைய நிர்ஹேதுக கிருபையினால் வந்ததன்றோ? இங்ஙனமே அவன் நிர்ஹேதுகமாக விஷயீகரிக்க விரும்பப் பெறுமவர்களுக்கு யாதொரு சாஸ்த்ர பரிச்ரமமும் வேண்டா; நான் பெற்றபேறு அவர்களும் பெறுவர்கள் — என்ற கருத்தை யடக்கி இப் பாசுரமருளிச்செய்தபடி.

**13.** உய்ந்தவள். வடமொழியில், ஜீவநம் உஜ்ஜீவநம் என்று இரண்டு சொற்களுண்டு. வயிறு வளர்த்து வாழ்வது ஜீவனமென்றும், ஆத்மா கடைத்தேறப்பெறுவது உஜ்ஜீவனமென்றும் சொல்லப்படும். ஜீவனம் என்கிற சொல்லுக்கு இவ்விரண்டுபொருள்களையும் கொள்ளுவாருமுளரெனினும், உஜ்ஜீவனமென்கிற சொல்லுக்கு வயிறுவளர்த்து வாழ்தலைப் பொருளாகச் சொல்லுவாரில்லை. தமிழில் (உய்தல்) என்கிற சொல்லுக்கு ஜீவனமும் உஜ்ஜீவனமுமாகிய இரண்டும் பொருளாம். *திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்து உய்ம்மினோ* என்றவிடத்து 'உஜ்ஜீவியுங்கோள்' என்று பொருள். *உய்ய்மின் திறைகொணர்ந்தென்றலகாண்டவர்* என்கிற அடுத்த பாசுரத்தில் 'ஜீவித்துப் போங்கோள்' என்று பொருள்.

(தொடரும்)

---

# தேவப்பெருமாள் வஸந்தோத்ஸவத்தில் சிறியதோர் அபாயம்

தேவப்பெருமாளுக்கு ஏழுநாளைய வஸந்தோத்ஸவம் 26-5-76 முதல் நடைபெற்றது. தினப்படி ஸாயங்காலம் 5-30க்குப் புறப்பாடு கண்டருளித் திருவடி ஸன்னிதியளவும் எழுந்தருளித் திரும்பியருள்வது வழக்கம். (31-5-76) ஆறுவது திருநாளன்று மாலை திருவடி ஸன்னிதியிலிருந்து திரும்பியெழுந்தருளுகையில் (கோபுரவாசலுக்குப் பத்திருபது கஜம் தூரத்தில் எழுந்தருளுகையில்) இயல் கோஷ்டியார் கோபுரத்தினுள் பிரவேசிக்கும் ஸமயம் கோபுரத்தின் மேலிருந்து (முதல் நிலையிலிருந்து) ஒருபகுதி பெருங்காற்றுக்கு இடிந்து இரண்டுவண்டிசெங்கற்கட்டிகள் கீழே விழுந்தன. இயல்கோஷ்டியின் பிந்தின வரிசைகளில் வந்துகொண்டிருந்தவர்களுடைய [ஏழெட்டு நபர்களினுடைய] உடலிலும் தலையிலும் பெரிய செங்கல்கள் விழுந்து பெரிய கிளர்ச்சி ஏற்பட்டது. அப்போது இயல் கோஷ்டியில் நாச்சியார் திருமொழிஸேவை நடக்கிறது. *நெஞ்சு துக்கம் செய்யப்போந்தாய் நின்றவிக்கன்னிபரோமை* என்னும் பாசுரம் ஸேவிக்கையில் இந்த ஸம்பவமாயிற்று. பெருமாள் விரைந்து உள்ளேயெழுந்தருளி, வஸந்தோத்ஸவ மண்டபத்திற்கு எழுந்தருளாமலே திருவபிஷேக மண்டபத்திற்கு எழுந்தருளியாயிற்று, காயமடைந்தவர்கள் உள்ளூரிலும் சென்னையிலும் சிகித்ஸை பெற்றுத் தேறினர்.

# ஸ்ரீ காஞ்சீ - வைசாகோத்ஸவ ஸமாப்தி

தேவப்பெருமாளுடைய வைகாசித் திருநாளைப்பற்றிச் சென்ற விதழில் தெரிவித்திருந்தபடியே உத்ஸவம் இனிது நடந்து முடிந்தது. திருத்தேருத்ஸவம் இரண்டு மூன்றுநாள் ஐந்காறுநாள்கூட நடைபெறுவது வழக்கம். திருவோண நக்ஷத்திரத்தில் தீர்த்தவாரி (அவபிரதம) கண்டருள்வது அபூர்வமாயிருக்கும். அது வொரு விசேஷானந்தமாக இருக்கும். சென்றவாண்டிலும் இவ்வாண்டிலும் திருத்தேர் நிலையைவிட்டுக் கிளம்பாமல் யதாஸ்தானமே யிருந்தது. பெருமாள் அன்று பின்மாலை சுபமுஹூர்த்தத்தில் புறப்பட்டருளித் திருத்தேரிலமர்ந்து, பக்த வர்க்கங்களுக்கு அவ்விடத்திலேயே ஸேவைஸாதித்தருளி இரவு எட்டுமணிக்குமேல் கீழேயிறங்கியருளி அருகேயிருக்கும் தோட்டத்தில் மாமூல்படி திருமஞ்சனமும் ஆஸ்தான கோஷ்டியும் கண்டருளி அபர ராத்ரியில் ஸந்நிதி சேர்ந்தாயிற்று. இவ்வளவே திருத்தேருத்ஸவ வைபவம், திருத்தேர் வீதிகளில் ஓடாமைக்குக் காரணம் பேரருளாளன் திருவுள்ள முணரும்.

உத்ஸவார்த்தமாக மழைபெய்வதென்று ஒன்றுண்டு; அதற்கு ப்ரஸக்தியே யில்லையாயிற்று. இடையில் இரண்டொருவேளை சிறிது தூறல் கண்டதுண்டு. பொதுவாகச் சொல்லில், மஹோத்ஸவம் காலகாலத்தில் சிறப்புறவே நடைபெற்ற தென்லலாம். ... ... ... ...

## ஸ்ரீ ராமாநுஜன் சந்தாதாரர்களுக்கு
## அவசியமான அறிவிப்பு.

பத்திரிகைஸம்பந்தமான அலுவல்கள் நடைபெறுவதற்குப் பணம் இன்றி யமையாதது. இதைப்பற்றி நாம் அடிக்கடி எழுதிக்கொண்டிருக்கவும் ஸங்கோசிக்கிறோம். கடைசியாகத் தெரிவிப்பதிதுவே. 1976 ஜனவரிமாதம் பிறந்த பின்பு சந்தாப்பணம் அனுப்பினவர்கள் இவ்வறிவிப்பைக் காணவேண்டாம். சில பல வருடங்களாக அனுப்பாதவர்களும், 1975ல் அனுப்பினவர்களும் நாளது 5—7—76க்குள் **25** ரூ. அனுப்பியாகவேண்டும். அவர்கள் மறுபடியும் பணமனுப்ப வேண்டியதில்லை. அன்னவர்கள் ஆயுள் சந்தாதாரர்களாகவே கருதப்படுவர்கள். இதைக் கவனிக்காதவர்களுக்கு அடுத்தமாதம் முதல் பத்திரிகை கிடைப்பது அரிதேயாம். ஜீவியச் சந்தா 100 ரூ. என்பதை மாற்றி 25 ரூ. மட்டும் என்றாக்கி யிருக்கிறோமென்பதைக் குறிக்கொள்ளவேணும். இதன்படி யனுப்பாதவர்களை பத்திரிகை வேண்டாதவர்களாக முடிவுசெய்வோம். இப்படிக்கு.

மானேஜர், க்ரந்தமாலா கார்யாலயம், காஞ்சீபுரம்—3.

## அத்திகிரி யருளாளர் துதி
(கலி விருத்தம்)

(ஸ்ரீ உவே. கா ப. வேங்கடக்ருஷ்ணய்யங்கார், Bolaram)

1 வேதியன்செய் வேள்வியினில் விருப்பியெதிர் வந்தான்
போதகப்பேர்ப் பொருப்பினையே பொருந்துமிடங் கொண்டான்

5

பாதகத்தைப் பார்தனிலே பாழ்செயவே வந்தான்
சீதளஞ்சேர் மலரடிகள் சென்னிமிசை வைப்பாம்.

2 அத்திகிரி யுச்சியினில் அனவரதம் நின்றான்
பத்துடைய வடியவர்கள் பதந்தொழவே யருள்வான்
வித்தகனும் கச்சிநம்பி வீடுறவே பார்த்தான்
நித்தமென துள்ளமிசை நின்றருளைப் பொழிவான்.

3 சக்கர முடன்சங்கும் தண்டுமொளிர் வாளும்
புக்கடையார் வலிதொலைக்கும் போர்வில்லு மேந்தி
மிக்கொளிரும் நீண்முடியான் மென்மலராள் மார்பின்
தக்கிருக்க நின்றருளும் தந்திகிரி மிசையே.

4 சிறைப்பறவை மீதேறித் திருவீதி வருவான்
கறைப்படியா நெஞ்சத்துக் கமலமலர் மேலோன்
சிறப்புடன்செய் வேள்வியினிற் றிகழ்வுறவே வந்தான்
அறப்பொருளை விளக்கிடுவான் அத்திகிரி நின்றான்.

5 தேசிகனும் எதிவரனும் தெளிந்துதொழு தேவன்
மாசுடையார் நெஞ்சத்தே மருவாத பாதன்
தேசுடைய தேவாதி தேவனவன் விண்ணோர்
ஆசையுடன் தொழநின்றான் அத்திகிரி மீதே.

6 பெருந்தேவி மணவாளன் பேராரும் அனந்த
சரசென்னுந் தடத்தாளன் தாமரைபோற் கண்ணன்
கருத்தள்ளும் வினையெல்லாங் கருக்காளன் வேதன்
அருச்சிக்கும் திருத்தாளன் அத்திகிரி யானே.

7 வேகவதி யாற்றருகே விளங்குமொரு குன்றம்
மாகமுற வளர்ந்தோங்கும் மதயானைக் குன்றம்
போகபதி யெனவிளங்கும் புகழ்க்காஞ்சி நகரில்
சோகமறத் தொழுதெழுவோம் தூயவனை வாரீர்.

8 அறம்வளர்க்கும் நாயகியும் ஆம்பிரக்கீ ழோனும்
திறம்மிகுத்த தேவர்களுந் தினந்தோறும் சேர்ந்தே
மறையுரைத்துப் போற்றவருள் மதயானைக் குன்றோன்
பிறப்பறுப்பான் பணிவோர்க்குப் பெருந்தகையோன் காண்மின்.

9 சேவைசெயுஞ் சீர்மையினைத் திருவாகிக் காட்டும்
பூவையெலா மாக்கிடவே பூவோனைத் தோற்றும்
சாவுதர உயிர்ப்பிரித்தே சங்கரனைக் காணும்
மேவுமொரு மதயானை மலைமிசையாம் வேந்தே.

10 அடியார்கள் தொழுதேத்த ஆவலுட னேற்கும்
முடியாத பிறவிக்கோர் முடிவிடமா நிற்கும்
கடல்சூழும் உலகத்தே கமலத்தோன் வேள்வி
அடியாக வானைமலை யன்றுவருங் கோவே.

11 மன்னுதமிழ் முன்சென்றே வழிகாட்டப் பின்னர்ப்
பன்னுவட மொழிதொடரப் பாங்குடனே நடுவண்
துன்றுமடி யார்மருவத் தொல்வீதி வருவான்
தொன்மையுறு மத்திகிரித் தூயனவன் றானே.

---

# இதனின் மிக்கோர் வியப்புண்டோ!

ஸ்ரீ காஞ்சி வரதராஜஸ்வாமியின் வையங்கண்ட வைகாசிமஹோத்ஸவத்தில் ஆங்காங்கு பற்பல விநோதங்களை மக்கள் காண்பதுண்டு. நவீன சர்க்கஸ், புதிய கண்காட்சி, என்றென்று சில நிகழும். ஓரிடத்தில் ஒட்டிக்கொண்டிருக்கும் இரட்டைக்குழந்தை; மற்றோரிடத்தில் ஓரேதலையுடன் இரண்டு உடல் கொண்ட ஒரு பசு என்றாப்போலவும் சில விநோதங்களைக் காணலாம். இவற்றுக் கெல்லாம் மேலாக ஒரு விநோத ஹாஸ்ய ஸம்பவத்தை ஸ்ரீகாஞ்சி வரதன் கருடோத்ஸவத் தன்று சிலர், விலாவெலும்பு குலுங்கக்குலுங்க சிரித்தனுபவிக் கும்படி நேர்ந்தது. இது கற்பனை நாடகமன்று. உண்மையாக நடந்த ஸம்பவமே. Truth is stranger than fiction என்பர்கள், அதாவது, சில உண்மை நிகழ்ச்சிகள் கற்பனைக்கும் எட்டாதபடி விநோதமாயிருக்கும் என்றபடி. இதற்கு ஒரு எடுத்துக்காட்டு கீழ் விவரிக்கப்படும் ஸம்பவம். நடந்ததை, நேர்முகவர்ணனை [Running commentary] ரீதியில் அறிவிக்கலாகிறது.

### நாடக பாத்திரங்கள்

1. ஒரு பேராசிரியர் [சமீபத்தில் ஒரு "பெரிய கோயிலை"ப் பற்றிச் சிறந்த ஆராய்ச்சிநூலைப், பல பெரியோர்களும் பத்திரிகைகளும் மிகமிக மெச்சும்படி எழுதி வெளியிட்டவர்].

2. ஒரு வயோதிகர் [ஆன்மிகத்துறை ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பவர்].

ஒரு அன்னியர் [இவர், தம் தேசத்தின் மாட மாளிகை கூடகோபுரங்களைத் துறந்து, தம்மவரின் நவீன உயர்தர டாப்பீக வாழ்க்கையையும் வெறுத்து, நம் பாரதநாட்டின் பூர்விகக் கலையையும் உன்னத பண்பையும் விரும்பி, ஆங்காங்குள்ள புனிதஸ்தலங்களையும் பெரியோர்களையும் நாடி ஆன்மீக உண்மைகளை யறிவதில் நோக்க முடையவர், மேற்சொன்ன வயோதிகரிடம் சில நாட்களாக வைணவத்தைப்பற்றிய உண்மைகளையறிய வந்துகொண்டிருப்பவர்.]

ஒரு என்ஜினியர். [காஞ்சியில் மேற்சொன்ன அன்னியருக்கு உதவிபுரிபவர்; இவரும் ஆன்மிக உண்மைகளையறிவதில் நோக்கமுடையவர்.]

ஒரு பண்ணையாளர் [இவரும் மேற்சொன்னவரைப் போன்றவரே.]

6. சென்னையிலுள்ள ஒரு சிறந்த அட்வகேட்

7. ஒரு நவீனர் [சென்னையிலுள்ள ஒரு நவீன சமயநூல் வெளியீடு சபை காரிய தரிசி என்று பிறகு ஏற்பட்டது]

இன்னும் மேற்சொன்ன வயோதிகரின் வீட்டிற்கு கருடோத்ஸவத்திற்காக வந்திருக்கும் விருந்தாளிகள், மற்றும் பலர், சிறுவர்கள்; மொத்தத்தில் இருபது பேருக்கு மேலிருக்கும்.

இடம்: மேற் சொன்ன வயோதிகரின் வீட்டு நடுக் கூடம்.

நேரம்: காலை 8 முதல் 9 மணி வரையில்

பேராசிரியர்: [வயோதிகரிடம்] "என் லெட்டர் நேற்று கிடைத்திருக்குமே."

வயோதிகர்: ஆம் கிடைத்தது: நான் மறுபடியும் உங்கள் புத்தகத்தை நன்றாகப் பார்த்தேன், அதில் ஒன்றும் தவறாக எழுதியிருக்க வில்லையே!

பேராசிரியர்: நான் ஒருவருடைய மனதையும் புண்படுத்தும் இயல் புடையேனல்லேன் என்பது எல்லாருக்கும் தெரியும். என்னையுமறியாமல் சிலதவறுகள் விழுந்திருக்குமோ வென்று சந்தேகித்துதான் உங்களுக்கு எழுதினேன்.

வயோதிகர்: ஒரு தவறுமில்லை. 'உள்ளதைச் சொன்னால் நொள்ளக் கண்ணிக்கு'——என்பார்களே! இந்த ரீதியில் சிலருக்கு மனம் நொந்தால் நாம் என்ன செய்ய முடியும். யதார்த்த வாதீ பஹுஜனத்வெஷீ என்று நம் ஸ்வாமி கூட அடிக்கடி அருளிச் செய்வரே. இவ்விஷயத்தில் உண்மையைத் தெரிவிக்கும் சில பழைய புத்தகங்களை இதோ எடுத்து வைத்திருக்கிறேன். அடையாளம் வைத்திருக்கும் பக்கங்களை மறுபடியும் நாம் பார்ப்போம். சந்தேகமே கிடையாது. அந்த மடம் ஆதியிலிருந்தது ஒரு விதம் தான்; இப்போதிருப்பது வேறொரு விதம் தான், இதை நிரூபிக்கச்சில கோர்ட்டு ரிகார்டுகளும் உள்ளன.

இந்த சமயத்தில் மேற் சொன்ன அன்னியரும் அவரது நண்பர்களும் உள்ளே நுழைகிறார்கள்.

வயோதிகர்: Hello! Good Morning—Welcome at the right time. This is Mr. — — — Dr. — — — whose recent excellent book, I showed you yesterday [வருக! வருக! நல்லதருணம். இவர்தான் நேற்று நான் காட்டிய அற்புத நூலை எழுதியவர் டாக்டர்———.

அன்னியர். Good Morning—(பேராசிரியரைப் பார்த்துக் கொண்டே, புன் முறுவலுடன்) 'உங்களை இங்குச் சந்திக்க நாங்கள் கொடுத்து வைத்தோம்! தெய்வம் எங்களை நல்ல வழியில் தான் நடத்துகிறது. உண்மையில் உங்கள் புத்தகம் மிக அற்புத மானதே......'.

இந்த சம்பாஷணை முடிவதற்குள் திடீரென்று ஒருபுதுமுகம் கூட்டத்தை விலக்கிக் கொண்டே உள்ளே நுழைகிறது. வீட்டுக்காரரிடம் மரியாதைக்குக் கூட ஒரு அனுமதியைக் கோரவில்லை. அவர்மேல் உராய்ந்து கொண்டேபெஞ்சியில் உட்காருகிறது. வயோதிகருக்குமுன் இரண்டடி தூரத்தில் ஒரு தனி நாற்காலியில் அன்னியர் அமர்ந்திருக்கிறார். அவர் அருகிலேயே மற்றொரு நாற்காலியில், பேராசிரியர் வீட்டுக்காரரைப் பார்த்தாற்போல் அமர்த்திருக்கிறார் – அன்னியரின் மற்றொரு பக்கத்தில் ஒரு நாற்காலியில் சென்னை அட்வகேட் அமர்ந்திருக்கிறார். இவர்களைச் சுற்றி மற்றவர் நின்று கொண்டிருக்கிறார்கள். கூடத்தில் வெளிச்சத்திற்குக் குறைவேயில்லை. நவீனர் ஒரு பெரிய பையிலிருந்து சில புத்தகங்களை யெடுத்து ஒவ்வொன்றாக அன்னியரிடம் காட்டுகிறார். கடைசியில், மேல் பிரஸ்தாவித்த பேராசிரியரின் சமீப வெளியீட்டையே (ஒரு ப்ரதியைத் தம்முடைய பையிலிருந்து எடுத்து) அன்னியரிடம் கொடுத்துக்கொண்டே கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

"இது சமீபகாலத்தில் வெளிவந்த ஒரு அற்புதமான ஆராய்ச்சி நூல். இதைப் பல பெரியோர்கள் கொண்டாடியுள்ளனர்: ஏறக்குறைய எல்லா பத்திரிகைகளும் இதை மிகமிகப் புகழ்ந்து விமர்சனம் செய்திருக்கின்றன. இதன் ஆசிரியர் எனக்கு நன்குத் தெரியும்! பத்தெட்டு வருஷங்களாக நெருங்கிய பழக்கம். இதிலுள்ளவை பெரும்பாலும் என்னுடைய சரக்கே. தொண்ணூறுபங்கு என்று கூட சொல்லலாம். பத்து பங்குதான் அவருடையதாக விருக்கும்! அந்த பத்து பங்கும் அபத்தம். (கூடத்திலுள்ளவர்கள் ஒருவர்முகத்தை யொருவர் பார்த்து திகைக்கிறார்கள்.) ஆசிரியரின் சொந்த மகத்வேஷத்தை அதில் காட்டியிருக்கிறார். அவருடைய துர்க்குணங்கள் எனக்கு நன்றாகத் தெரியும்............". (மறுபடியும் கூட்டத்தில் திகைப்பு.)

**வயோதிகர்;** (நவீனரை நோக்கி) Sir, உங்கள் பேச்சைக் கொஞ்சம் நிறுத்துங்கள். இதன் நூலாசிரியர் உங்களுக்கு எவ்வளவு காலமாகத் தெரியும் என்கிறீர்கள்?

**நவீனர்:** "பத்தெட்டு வருஷங்களாக நன்றாகத் தெரியும் என்றுதான் ஏற்கனவே சொன்னேனே! அவரும் சிலதடவை என் வீட்டிற்கு வந்திருக்கிறார். அவர் வீட்டிற்கு நானும் பல தடவை போய் பல விஷயங்களை விளக்கியிருக்கிறேன் ஆகையால்தான் அவருடைய மர்மங்களெல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும் என்றேன். (மறுபடியும் கூட்டத்திலுள்ளவர் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு திகைக்கிறார்கள்.)

**வயோதிகர்:** (நவீனரைப் பார்த்து) இதன் ஆசிரியர் இப்போது எங்கிருக்கிறார் என்று சொல்லுவீரா ?

**நவீனர்:** ஏன் இந்த கேள்வி! அவர் இப்போது சென்னையில்தான் இருக்கிறார். (கூட்டத்தில் சலசலப்பு, சிரிப்பு.)

**வயோதிகர்:** உங்களுக்கு அவர் அடியோடு தெரியாது என்கிறேன்.

**நவீனர்:** Nonsense! கூட வாருங்கள், சென்னைக்கு அழைத்துச் சென்று நான் சொன்னதை நிரூபிக்கிறேன்.

[மறுபடியும் கூட்டத்தில் ஒரே திகைப்பு; பரபரப்பு; ஒரே சிரிப்பு; சிறுவர்களின் கைக்கொட்டு; நவீனர் முகத்தையும் பேராசிரியர் முகத்தையும் மாறிமாறிப் பார்க்கிறார்கள்].

**பேராசிரியர்:** எல்லோரையும் வணங்கிக் கேட்டுக்கொள்கிறேன். சற்று சப்தம் போடாமல் இருக்கும்படி. (நவீனரைப்பார்த்து) "இப்புத்தகத்தில் தொண்ணூறு பங்கு உங்களுடைய சரக்கு என்றும் பத்து பங்குதான் ஆசிரியருடையது என்றும் சொல்கிறீர். அந்த பத்து பங்கும் அபத்தம் என்கிறீர். எப்படி என்று சற்று நிரூபிப்பீர்களா? ஓரிரண்டிடம் காட்டினால் போதும்!

**நவீனர் :** ஆம்! உண்மைதான். எனக்குக் கிடைக்கவேண்டிய டாக்டர் பட்டத்தை அந்தப் பையல் தட்டிக்கொண்டு போய்விட்டான். (மறுபடியும் கூட்டத்தில் ஒரே சலசலப்பு. சிறுவர்களின் சிரிப்பை யடக்கவே முடியவில்லை.)

**வயோதிகர்.** (நவீனரை நோக்கி) "அதிகமாக ஓடாதீர். சற்று நிதானித்து கவனித்து பேசும். (பேராசிரியரைச் சுட்டிக் காட்டி) இவர் கேட்டதற்கு பதில்

6

சொல்லும். சுவாலை ஏற்றுக்கொள்கிறீரா ? இல்லையா ? புத்தி ஸ்வாதீனத்துடன் தானே இருக்கிறீர் !"

நவீனர்: (பேராசிரியரின் முகத்தை உற்று நோக்கிக்கொண்டே] "இப்புத்தக வாசிரியருக்குப் பரிகிறீரே ! உமக்கு அவர் வேண்டியவரா?" யாராணுலென்ன ? தப்பு தப்புதானே! (மறுபடியும் கூட்டத்தில் ஒரே சலசலப்பு; சிரிப்பும் கைக் கொட்டலும் அதிகரிக்கிறது. அன்னியர், கைக்குட்டையால் தன் சிரிப்பை மறைக்க முயலுகிருர் )

வயோதிகர்: (நவீனரைப் பார்த்து) "உமக்கு இதன் ஆசிரியர் நன்ருகத்தெரியு மென்கிறீரே, அவர் வீட்டிற்கும் அடிக்கடி போய் நெருங்கியும் பழகியிருக்கிறீர் என்கிறீரே; அவருடைய நண்பர்களும் உறவினர்களும் உமக்குத் தெரிந்திருப்பர் களே! நன்ருகப் பாரும்! (பார்வையில் குறைவில்லையே) இவர் அவருடைய நண்பரா; பந்துவா; அல்லது சகோதரரா யிருக்கலாமா...அல்லது.. இவர்...அவரே தாஞ...நன்ருகப் பாரும்' (கூட்டத்தில் ஒரே சிரிப்பு, சிறுவர்களின் கைக்கொட் டல்களை அடக்கவே முடியவில்லை).

நவீனர்: Nonsense, எல்லோரும் சேர்ந்து என்னைப் பைத்தியக்காரனுக்கப் பார்க்கிறீர்களே; அவன் ஏன் இங்கு வரப்போகிருன்! (மறுபடியும் கைக்கொட்ட லும் கூச்சலும் அதிகரிக்கிறது.) சென்னை அட்வகேட் நவீனருக்கு, முகக்குறிப்பி ஞல் உண்மையைத் தெரிவிக்கிருர். உடனே நவீனர் சடக்சென்று எழுந்து புத்தகங் களை எடுத்து தம் பையில் போட்டுக்கொண்டு நழுவப்பார்க்கிருர்!

வயோதிகர்; (நவீனரைப் பார்த்து) "சற்று நில்லும். வரும்போதுதான் மரி யாதைக்குக்கூட அனுமதி பெருமல் வந்தீர். போகும்போதாவது விடைட்பெற்றுப் போகக்கூடாதா! So, May I take you as a true representative of your new cult......engaged in nothing but false propaganda-denying truth and affirming untruth......and refusing to see the truth even if lit large before your very eyes! (ஆகையால் உம்மை, சென்னையில் சமீப காலத்தில் ஏற்பட்டுள்ள உங்களது நவீன சபையின் உண்மைப் பிரதிநிதி என்று கொள்ளலாமா? உண்மையைப் பொய் என்பதும், பொய்யை உண்மை யென்பதும், முழுப்பூசனிக்காயை சோற்றில் மறைக் கப்பார்ப்பதும், பிறர் குணங்களை நீங்கள் அபகரிப்பதும், உங்களுடைய தோஷங் களைப் பிறர்மேல் ஏற்றுவதும், ஆயிரம் கேண்டல் பல்புபோட்டு உண்மையை கண் ணெதிரில் நிற்கவைத்தாலும் அதைப்பார்த்து ஒப்புக்கொள்ள மறுப்பதும், இவை போன்றவைதானே உம்முடைய சபையின் நோக்கம்? (இந்த கேள்விக்குப் பதில் வரவில்லை. கூட்டத்திலிருந்து எப்படி, எந்த திக்காக நவீனர் நழுவினுர் என்று ஒருவராலும் சொல்ல முடியவில்லை.

அன்னியர்: So, we have had a very good example here as to, to what extent fanaticism can drive one mad! (மதவெறியானது ஒருவனை எவ்வளவு தூரம் பைத்தியமாக்கி திரியவைக்குமென்பதற்குச் சரியான திருஷ்டாந்தம் இங்கு நமக்குக் கிடைத்தது.)

காளிதாஸன், ஷேக்ஸ்பியர் போன்றவர்களுடைய கற்பனைக்கு மெட்டாத விநோத உண்மை நிகழ்ச்சியொன்றை கண்டனுபவித்தோமல்லவா !

—பாலாஜீ.

சுபமஸ்து.



சென்னைமாநகரில் ஸத்காலக்ஷேப சபையின் ஸெகிரிடெரியும்
சிறந்த ஆஸ்திகரும் ஸ்ரீ வைஷ்ணவ சிரோமணியும்
அனேக தார்மிக கார்யப்ரவர்த்தகருமான

**ஸ்ரீமான் A. V. கன்னையா நாயுடு அவர்களின்**

செல்வப்புதல்வனை

# வாசுதேவ நாயுடுவின்

# திருமணக்காட்சி.

# செய்திகள்

*[ஸ்ரீ ராமாநுஜமிஷன் கௌரவ பொதுச்செயலாளர் ஸ்ரீ உ. வே. P.B K. ஸ்ரீநிவாஸாசாரியர்]*

ஸ்ரீ ராமாநுஜரின் 960-வது வருஷபூர்த்தி மஹோத்ஸவம் அதாவது 16-வது ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் பிங்களஹு சித்திரைமீ திருவாதிரைநாளன்று நடைபெறவிருக்கிறது அதன் வைபவமாக நளஹு சித்திரை திருவாதிரை முதல் ஒருவருஷம் ஸ்ரீ ராமாநுஜர் வைபவபரமாகவே உபன்யாஸம் நடைபெறச் செய்யவேண்டும் என்ற உத்தேசத்தினால் ஸ்ரீ ராமாநுஜமிஷன் ஸ்ரீரங்கம் கிளையின் சார்பில் ஸ்ரீரங்கம் வடக்கு உத்தர வீதியில் உள்ள ஸ்ரீரங்க நாராயண ஜீயர் மடத்தில் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி தலைமையில் 31—5—76 வைகாசி திருவாதிரைநாளன்று உபன்யாச விழா ஆரம்பமாயிற்று. ஸ்ரீ உ. வே. வித்வான் சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியும், ஸ்ரீ உ. வே. வித்வான் ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சநம் ஆசிரியர் S. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமியும் ஸ்ரீ ராமாநுஜர் வைபவபரமாய் இந்த தொடர் உபன்யாஸம் நடைபெறவேண்டிய தின் முக்கியத்தையும், நடைபெறவிருக்கும் முறைகளைப் பற்றியும் உபன்யஸித்தனர். 3—6—76 அன்று ஸ்ரீ உ. வே. வித்வான் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீநிவாஸாசாரியார் ஸ்வாமி "ஸ்ரீ வேதார்த்த ஸங்க்ரஹத்தில் ஸ்வஸித்தாந்தம் என்பது பற்றி உபன்யஸித்தார். மேல் 13—6—76 ஞாயிறன்று ஸ்ரீ உ.வே. வித்வான் R. நரஸிம்ஹாசாரியார் ஸ்வாமி "ஸ்ரீபாஷ்யத்தில் அந்தரதிகரணம் பகவான் தாமரைக் கண்ணினன்" என்பதுபற்றி உபன்யஸிப்பார். ஸ்ரீபாஷியம் வேதாந்த ஸாரம், வேதாந்த தீபம் இவற்றில் 10 உபன்யாஸம், ஸ்ரீ கீதாபாஷ்யத்தில் 10 உபன்யாஸம், ஸ்ரீ வேதார்த்த ஸங்க்ரஹம் கத்யத்ரயம், நித்யம் இவற்றில் 10 உபன்யாஸம். பகவத் விஷயத்தில் ஸ்ரீ ராமாநுஜர் நிர்வாஹபரமாய் 10 உபன்யாஸம் ஆக 50 உபன்யாஸம் பல மஹனீயர்களைக்கொண்டு நடைபெறச்செய்ய ஏற்பாடாகி உள்ளது.

---

## கடிதம்—2

துக்ளக் என்கிற பத்ரிகையின் 15—4—76 வெளிவந்த இதழில் P. B. A. ஸ்வாமியைபற்றிச் சில 7, 8, வரிகள் எழுதப்பட்டுள்ளன:— "சொந்தமாகப் பல நூல்களை எழுதி, பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வெற்றிகரமாகச் செய்து கொண்டுவரும் சிலரில் காஞ்சீபுரப் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார் சுவாமிகளை முக்கியமாகக் குறிப்பிடலாம். இப்பொழுது அவரது வயோதிக நிலையிலும்கூட, ஆண்டுதோறும் அவர நூல்களை வெளியிடத்தவறுவதில்லை" என்று.

P B. A. சுவாமிகள் ஆண்டுதோறும் எழுதியருள்வதுதான் அப்பத்திரிகை யாசிரியர்க்குத் தெரிந்தது போலும். மாதந்தோறும் (ஏன்?) நாள்தோறும் நாழிகைதோறும் எழுதி வருவதும் அச்சிட்டு வருவதும் அவர்களுக்குத் தெரியவில்லை போலும். இதை ஸ்ரீராமாநுஜன் மூலமாக அவர்களுக்கு உணர்த்துப்படி கேட்டுக்கொள்ளுகிறேன். **M. A. வேங்கடகிருஷ்ணன்**, சென்னை-5.

[பத்திராதிபருடைய பதில்;— துக்ளக் என்றொரு பத்ரிகை வெளிவருவதே நமக்குத் தெரியாது. அந்தப்பெயருக்கு என்ன பொருளென்பதும் தெரியாது. அவர்கள் தமக்குத் தெரிந்தவளவு எழுதியிருப்பதில் தவறும் தோன்றவில்லை.] *